ஞாயிறு வெளியீடு. விலை 0-1-3. REGD. NO. M. 4455

# திராவிடநாடு

விளம்பர விகிதம்.
இஞ்சு ஒன்றுக்கு 1-0 0.
சர்க்கார் கோர்ட்டு 2-0-0

வருடசந்தா ரூ. 5—0—0
ஆறுமாதம் ரூ. 2—8—0
தனிப்பிரதி ரூ. 0—1—3

மலர் 3 | காஞ்சிபுரம் 19—3—44 | இதழ் 3.

தொடர்கதை

## பார்வதி பி. ஏ;

சேளமியன்.

கதை கற்பனையே, கதையில் வரும் பெயர்கள் யாரையும் குறிப்பிடுவனவல்ல.

[முன்பு:-லோபி ஆலாலசுந்தரர், அறிமுகப் படுத்தப்படுகிறார். அவருக்கு வாரிசாகவர இருக்கும் பார்த்திபன் எனும் வாலிப வாய்வீரருக்குக் காதலி பார்வதி B. A; இவள் ஓர் இலட்சியவாதி. குமார் எனும் பாட்டாளி, பார்த்திபனுடைய பிரசங்கத்தில் இலயிக்கிறான். குமார் பொதுப் பணத்தைக் கொள்ளையடித்து மறைந்து விட்டதாகப் பத்திரிகையிலே செய்தி. பார்வதி கவலைப் படுகிறாள். உத்தமி என்பவளின் சிநேகிதத்தால் பார்வதிக்கு டைபிஸ்ட் வேலை கிடைக்கிறது. பார்த்திபனால் 'ரட்சகன்' என்னும் பத்திரிகை நடத்தப்படுகிறது. குருக்கள் குமரகுருபரர், பார்த்திபனுக்கும் ஜெயத்துக்கும் சிநேகிதம் உண்டாகும்படி வேலைசெய்து மகிழ்ச்சியடைகிறார். இதற்கிடையே பார்வதியின் தோழி, உத்தமிக்கு நரசிம்மன் என்பவன் காதலனாகிறான். பார்த்திபன், கதகளி நடனம் பார்க்கக் கேரளம் செல்கிறான். உத்தமி கருவுற்றாள். நரசிம்மன், குமுதினி என்பவளைக் கலியாணம் செய்து கொண்டு, உத்தமியைக் கைவிடுகிறான், குமுதினியின் உதவியால் உத்தமி பெங்களூர் செல்கிறாள். அங்கு லேடிடாக்டர் லலிதா தன் கதையைக் கூறுகிறாள். பிறகு,....]

லேடிடாக்டர் லலிதகுமாரியின் சிகித்சைசாலையிலே, உத்தமி, ஓரளவு தனது துக்கத்தை மறந்துஇருக்கலானாள். தன்னிடம் வைத்யத்துக்கு வருவோரின் வரலாறுகளை, லலிதகுமாரி உத்தமிக்குக் கூறுவாள், பொழுதுபோக்க.

"எவ்வளவோ செல்வமாக வளர்க்கிறோம். வீட்டிலே ஒருகுறை கிடையாது. குழந்தைமட்டும் என்னமோ நாளுக்கு நாள் இளைத்துக்கொண்டே வருகிறது. என்னென்னமோ டானிக்குகளைக் கொடுத்துப்பார்த்தோம். கொஞ்சங்கூடப்பயன் ஏற்படவில்லை" என்றுசொல்லித், தாய், தன்மகளைக் கொண்டுவந்து லேடிடாக்டரிடம் காட்டுகிறாள். லேடிடாக்டர், அந்தநோயாளியின் உடலைப்பரிசோதிப்பதற்கு முன்பாக, உள்ளத்தைப் பரிசோதிக்கிறார்கள்!

"உட்காரம்மா! உட்காரு! வைத்யசாலையிலே பலபேர் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கத்தான் செய்வார்கள். இங்குவெட்கப் படலாமா? உட்கார்." என்றுகூறிவிட்டு "குழந்தைக்கு என்ன வயது?" என்று தாயைக்கேட்கிறாள். "பத்தொன்பது முடிந்து இருபதாம்வயது ஆரம்பமாகுதுங்க" என்றுதாய் பதில்கூறிவிட்டு, முந்தானையால் கண்களைத் துடைத்துக்கொள்கிறாள். பெண்ணின் முகத்திலோ சோகம்கப்பிக்கொள்கிறது. லேடிடாக்டர், மிருதுவான குரலிலே, "புருஷன் இறந்து மூன்றுவருஷம் இருக்குமா?" என்றுகேட்கிறாள், நோய்கொண்டவள் விதவைஎன்பதறிந்து. "மூணுவது திவஷம்இன்னும் மூணுமாதத்திலே வரப்போவுதுங்க" என்றுநீர் தளும்பும்கண்களுடன் தாய்பதில் கூறுகிறாள். எந்தடானிக்தான் என்னபலன் தரமுடியும், இந்த இளம்விதவைக்கு, என்ற எண்ணம் பிறக்கிறதுலேடிடாக்டருக்கு. பெருமூச்சுடன், ஏதோ டானிக்கின் பெயரை எழுதிக் கொடுத்து அவர்களை அனுப்பிவிட்டுலலிதகுமாரி உத்தமியிடம் சென்றுகூறுவாள், "இப்போதுவந்து சென்றாளேஒருஅழகிய பெண், அவளைப்பீடித்திருக்கும் நோய் எனக்குத் தெரியும். பருவம்பாழாக்கப்படுவதால் படரும் பாழானநோய். அதற்கு நான் என்னசெய்ய முடியும்? உண்பதும் உறங்குவதும் உயிர்வாழப் போவதும், ஆனால் உள்ளம், மகிழ்ச்சியை அல்லவா உணவாகக்கேட்கிறது! பால்யவிதவையான அந்தப்பெண்ணுக்கு,ச்சந்தோஷம் எப்படி இருக்கமுடியும்? விசித்திரமான நிலைமை இதுஉத்தமி. அந்தப்பெண்ணின் நோய் போகவேண்டுமானால், அவளுக்கு நான்மருந்து கொடுத்துப் பிரயோஜனமில்லை. சமூகத்திலேஉள்ளபித்தம்தெளிய மருந்திடவேண்டும், அப்போதுதான், அபலைகளை அலைக்கழிக்கும் அந்தக்கொடிய நோய் ஒழியும்." என்றுகூறுவாள். உத்தமிக்கு, லேடிடாக்டரின் சிகித்சைச்சாலை, ஒரு சிறந்த அறிவுவளர்ச்சிப் பள்ளிக்கூடமாக இருந்தது!

"அஜீர்ணமாம் இந்த அம்மாளுக்கு! ஏன் இருக்காது? எத்தனை தடவை மருந்து கொடுத்தாலும், எப்படி அஜீர்ணம் ஒழியும்? இவள்புருஷன் பெரிய செல்வவான். ஊரைமிரட்டுவான், வீட்டிலேயோ ஒடுக்கந்தான். காரணம் தெரியுமோ! இந்தச் சுந்தரியைக்கலியாணம் செய்துகொண்ட பிறகுதான் அவனுக்குச் சுக்கிரதிசைபிறந்ததாம்! அப்படி ஒருபைத்தியக்கார எண்ணம் அவனுக்கிருப்பதால், அவள் இஷ்டத்திற்கு மாறாகநடப்பதில்லை. அவளுக்கோ, உண்ணவேண்டிய அளவு தெரிவதில்லை. ஊரிலேவிற்கும் பலகாரங்கள் வந்துவிடுகிறது பிரதிதினமும், உண்டு உருளுகிறாள், பிறகு வயற்றுவலி என்கிறாள், வயற்றுவலிபோக, இரண்டு ஜிலேபியைப்பாலிலே தோய்த்துச் சாப்பிடலாம்என்று கூறுவாள், அதுவும்நடக்கும், பிறகு அஜீர்ணம் வராமலிருக்குமா! மருந்துதரும்போதுகூட, மறக்காமல் இதைக்கேட்டுக்கொள்கிறாள் என்னவகையான ஆகாரம் சாப்பிடலாம்? பிஸ்கட்டு சாப்பிடலாமா? பழம், எதுநல்லது? என்றுகேட்கிறாள். மருந்துகூட இனிப்பாகஇருக்கவேண்டுமாம்.இப்படிப்பணம் மிகுந்திருப்பதால் பாழாகும் பேர்வழிகள் நடமாடும் இதேஇடத்திலே, வறுமையால்வாடி வதங்கி, வயறு ஒட்டிப்போய், பிறகு எதைத்தின்றாலும் ஜீரணம்செய்துகொள்ளமுடியாத அளவுக்கு உடல்உறுப்புகள் கெட்டுவிட்டவர்களும், என்னிடம் மருந்துக்கு வருகிறார்கள்—தர்மத்துக்கு. நான் என்னசெய்வேன்? எனக்கு நன்றாகத்தெரிகிறது, அந்த அஜீர்ணநோய்க்காரியிடம்உள்ள பொருள் வசதியிலே கொஞ்சம், அந்த ஒட்டியவயறுகளுக்குப் போய்ச்சேர்ந்தால் இருவருக்கும் ஒரு

(2-பக்கம் பார்க்க.)

## பார்வதி பி, ஏ;

1-ம் பக்கத்தொடர்ச்சி.

நோயும்இராது. ஆனல் நான் அதைச் சொன்னல் உலகம் கேட்குமா?" என்று, மருந்துதேடிவரும்மாதின் வரலாற்றைக் கூறுவதிலேயே மகத்தான அறிவையும் கலந்துரைப்பாள் லேடிடாக்டர். உத்தமிக்கு, லலிதகுமாரியின், அறிவுக்கூர்மை ஆச்சரியமாகத் தோன்றிற்று. ஒரு நாள் வைத்தியத்துக்குவந்திருந்தவரிலே, நடுத்தரவயதுள்ள ஒருமாதை, லேடிடாக்டர் இரண்டொருமுறை, வா அம்மா! என்ன உடம்புக்கு? வா, என்றுஅழைத்தும், அந்த மாது, மற்றவர்களுக்குப் பார்த்துவிட்டுப் பிறகு தனக்குப் பார்க்கலாமென்றும் தனக்கு அவசரம் ஒன்றும் இல்லையென்றும், சாதாரணஜுரமென்றும் கூறினள். லேடிடாக்டர் புன்சிரிப்பாக, "அப்படியானல் நாற்காலியிலே உட்காருங்கள்" என்று கூறினள். உத்தமிக்கு, லேடிடாக்டரின் புன்சிரிப்பின்காரணம் தெரியவில்லை. வைத்தியத்திற்குவந்தவர்கள் எல்லோரும்போய்விட்டனர். அப்போதும் அந்தமாது, தனதுநோய் இன்னதெனக் கூறத்தயங்கினள். உடனே லலிதகுமாரி அந்த மாதைப்பார்த்து "கூச்சப்படாமல் சொல்லுங்கள். இதுயாரோ வேற்றுமனுஷாள் இருக்கிருர்களே என்று சங்கோசப்படவேண்டாம். என்தங்கைதான்" என்று உத்தமியைப்பற்றிக் கூறினள். பிறகுதான், வைத்யத்துக்குவந்த அம்மையார், மெள்ளநடந்துசென்று லேடிடாக்டரிடம் குசுகுசுவென்று ஏதோகூறினர்கள். "இவ்வளவுதானு? சரி, மூன்று இன்ஜக்ஷன்போட்டுக்கொண்டால் போதும், பயப்படவேண்டாம். தங்கள் வீட்டுக்காரர்கொஞ்சம் குஷால்பேர்வழி போலிருக்கு "என்று கூறிவிட்டு, லேடிடாக்டர், அந்த அம்மையாருக்கு ஒரு இன்ஜக்ஷன் செய்துஅனுப்பிவைத்துவிட்டு, பிறகு உத்தமியிடம் "பார், உத்தமி! அந்த அம்மாளுக்குக்கடுமையான மேகவியாதி. அவள் புருஷன் எவளெவளிடமோ சம்பந்தம் வைத்துக்கொண்டு, இவளுக்கு இந்த நோய்வரும்படிசெய்துவிட்டான். இவள் பாவம், வெளியேசொல்லவெட்கப்பட்டுக்கொண்டே இருந்திருக்கிறள். நோய் முற்றிவிட்டது, இப்போது இன்ஜக்ஷன் செய்யும்படியானநிலைமை ஏற்பட்டது. இப்படிப் புருஷர்கள்அலைந்து அழிந்து, தமதுகுடும்பத்தைக் கெடுக்கிருர்கள். இந்தநோய், இவளுக்கு இன்ஜக்ஷன்கொடுத்துவிட்டால் போய் விடுமா? கற்பின்மீதுகவலை பிறக்கும்படி ஆடவர்யாவருக்குமே அறிவு இன்ஜக்ஷன் கொடுக்கவேண்டும்" என்று லலிதாகூறினள்.

"வயது இருபத்திரண்டுதான் இதற்குள் ஐந்து குழந்தைகள். என் இந்தப் பெண்ணுக்கு க்ஷயரோகம் வராது சொல்லு. என்னல்முடியாது, மதனப் பள்ளிக்கு அனுப்புங்கள்என்று கூறிவிட்டேன்" என்றுஒரு நோயாளியைப்பற்றி உத்தமியிடம்கூறுவாள்.

"எனக்கு அதெல்லாம் தெரியாது. உங்கபெண்ணுக்கு நோய் போகவேண்டுமென்ருல் காலையிலே முட்டைபால் சாப்பிடத்தான் வேண்டும்"

"ஐய்யய்யோ! நாங்கள் சைவமாச்சே. அன்னியபதார்த்தம் சாப்பிடக்கூடாதுங்களே"

"அப்போ, இந்த நோய்க்குத் தெரிந்திருக்கணும், இவங்கசைவர்களாச்சே, முட்டைபால் சாப்பிடக் கூடாதே, நாம் இவர்களிடம் போகக்கூடாது என்பது"

"டாக்டரம்மா! கேலிசெய்யாதிங்க. நாங்கதொண்டைமண்டல முதலியாராச்சே, பரம்பரையா சைவம். நீச்சநாத்தமே பிடிக்காது."

"எனம்மா இங்கேஎன்னசைவாளுக்கு ஒருவிதமான மருந்து மத்தவாளுக்கு வேறேவிதமான மருந்துன்னு இருக்கு? ஒரேவிதமானமருந்துதான். பத்தியவகையும் அதைப்போலத்தான்"

"இதென்ன கர்மகாண்டமா போச்சி, நாங்க அசைவபதார்த்தத்தைச் சாப்பிடுவதுதெரிஞ்சா, எங்கபந்துக்கள் ஜாதியைவிட்டு எங்களைத்தள்ளி வைப்பாங்களே"

"என்னே என்னம்மா செய்யச்சொல்றே. வேணும்னு எங்கஜாதியிலே வந்து சேர்ந்துடுங்க"

"டாக்டரம்மா! நேரமாவுது. ஒருகாரியம் செய்யுங்கோ. மருந்தோடு மருந்தா, நீங்களே, ஆஸ்பத்திரியிலே இருந்தே முட்டைபாலே அனுப்பிடுங்க. அப்போ ஒரு வம்பும் வராது"

"சைவமா இது? சரி! செய்கிறேன். சிவசிவான்னு சாப்பிட்டுக் கொண்டு வாங்க, பிறகு சேவல்கூட முட்டையிடக் கூடாதான்னு தோன்றும் உங்களுக்கு! முட்டைபால் அவ்வளவு ருசியாஇருக்கும், உடம்புக்கும் நல்லது."

இதுபோலச்சைவமும் நோயும்கொண்டவர்களுக்கு மதியும் மருந்தும் கலந்து லேடிடாக்டர் லலிதகுமாரி கொடுத்துவரக்கண்ட உத்தமிக்கு, டாக்டரிடம்அன்பும் மதிப்பும் அதிகரிக்கலாயிற்று. ஆனல் ஆண்டாளுக்கோ? (தொடரும்)

## கரூரில் கிந்தனர்.

கரூரில் கடந்த 11—3—44 சனிக்கிழமையன்று "நகைச்சுவையரசர்" உயர்திரு N. S. கிருஷ்ணன் அவர்கள் "கிந்தனர்" காலக்ஷேபம்செய்தார். மிகுதியான மக்கள் கூடியிருந்தனர். திரு. கிருஷ்ணன் அவர்களுக்கு கரூர் பகுத்தறிவுச் சங்கத்தாரால் ஒரு வெள்ளிக்கிண்ணம் பரிசாக அளிக்கப்பட்டது.

## மணிநினைவுக் கழகம்.

நாகை, சென்ருல் நமதுமணி, இருக்கிருர்!—என்று பெருமையோடும் பூரிப்போடும் கூறிக்கொண்டிருந்த காலம் போய், நாகையிலே மணிநினைவுக்கழகம் ஒன்று நிருவிஇருக்கிருர்கள் என்றதுக்கத்தின் ஆதாரானபெருமூச்சு, உடனிற்கக்கூறவேண்டிய காலமாகிவிட்டது. தன்மான இயக்கத்தின் ஆரம்பத்தகாலத்திலே, அதற்குத்துணைநின்று, தொல்லைகளைப்புன்சிரிப்பால்வென்று, தோழர்களை அன்பால் அணைத்து, எதிரிகளைஒரே "முறைப்பினல்" மூலையில் பதுங்கச்செய்த போர்வீரர்களின் அணிவகுப்பிலேநின்று தொண்டாற்றிய மணி அவர்களின், பெயரால், நாகப்பட்டின நண்பர்கள் ஒருகழகம் அமைத்ததுகாண மகிழாததோழன் இருக்கமுடியாது. பெரியார் ஈ. வெ. ராவின் பெரும்பணி, காடு முரடான களத்திலே செய்யவேண்டி இருந்தபோது அவர் அருகு சாது தமது பணியைச் செய்ததற்குக் காரணம், மணிபோன்ற வீரமணிகள், பெரியாரின் விழியைத்தமது வழியாகக் கொண்டுநடந்ததுதான்!

9—3—44ல் பெரியார் இராமசாமி அவர்கள், நாகை D. S. மணி பகுத்தறிவுக் கழகத்திலே, மணி அவர்களின் உருவப்படத்தைத் திறந்துவைத்தார்.

அன்றுகாலை புகைவண்டி நிலயத்திலிருந்து, பெரியாரும், குடந்தை S. K. சாமி, நாகை உயர்தரப்பள்ளித் தலைமை ஆசிரியர் T. V. சொக்கப்பா M. A. L. T; வேலூர் C. P. சின்னராஜு ஆகியோர் ஊர்வலமாக அழைத்துச்செல்லப்பட்டபோது, பெரியாரின் நினைவெல்லாம், அதுபோல நடைபெற்ற எத்தனையோ ஊர் வலங்களின் போது, எது போலநடந்துவந்த மணியின் மீதுதானே, இருந்திருக்கும்!

நாகைமணி போன்ற எண்ணற்றவீரர்களைத்தமிழகம் பெறவேண்டும், தொண்டின்பெருமையைத் தோழர்கள் உணரவேண்டும் என்பதற்காக, திராவிடர் கழகம்" நாகையிலே பெரியாரால் துவக்கிவைக்கப்பட்டது. பெரியார் உருவப்படத்தைத் தோழர் T. V. சொக்கப்பா அவர்களும், பன்னீர் செல்வம் படத்தைத் தோழர் சின்னராஜு அவர்களும், திறந்துவைத்தனர். தோழர் R. V. கோபால் அவர்கள் இல்லத்தில் மாலையில் பெரியார் அவர்களுக்கும் மற்றவர்கட்கும் தேநீர் விருந்தளிக்கப்பட்டது. மாலைமுதல் இரவு 11 மணிவரை, அவுரித்திடலில், Dr. ராதா கிருஷ்ணன் அவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. பல சங்கங்களின் வரவேற்புரைகள் பெரியாருக்குத் தரப்பட்டன. குடி அரசு வளர்ச்சிக்காகத் தோழர்கள் சந்தானம், பாப்பையா இருவரும் இரண்டு ரூபாய் நன்கொடை தந்தனர். தோழர்கள் S. K. சாமி, C. P. சின்னராஜு பெரியார், ஆகியோர் தமிழர் நிலைமைபற்றிச் சொற்பொழி வாற்றினர்கள்.



## எங்கே? எங்கே!

பாரதன்.

"எங்கே, தோழனே! இரண்டு வாரங்களாக உன்னைக்காணேம், எங்கே சென்றிருந்தாய்? எங்கே ஜோலி?" என்று வீரன்கேட்டான். நீங்களுந்தான் கேட்பீர்கள் என்று எண்ணுகிறேன், நாம் சந்தித்து இரண்டுமூன்று வாரங்களாகிவிட்டன! சந்திக்கவில்லையானலும் சிந்திக்காமல் இருந்துவிட்டேனென்று நினைக்க வேண்டாம், ஆழ்ந்திருந்தேன் சிந்தனையில், அயர்ந்துவிடவில்லை, மகிழ்ச்சியுடன் இருந்தேன், மறந்துவிடவில்லை, காரணம், தமிழர் வாழ்விலே, நல்ல துளிர்விடக்கண்டதுதான்! மாணவ உலகெனும் மலர்த்தோட்ட மணம், கம்மென்றுவீசும் போது, மகிழ்ச்சி மனதிலே எழாதிருக்குமோ! இரண்டு வாரங்களாக மாணவர்களின் மணியாரம்தாங்கி மடல் வெளிவந்தால், நான் என் வேலையைநிறுத்திவைத்திருந்தேன், இதோ தொடங்கிவிட்டேன்.

"எங்கே?" என்று வீரன் என்னைக் கேட்டதும், எனக்கு, இந்த அழகான பதத்தின் அபூர்வமான நிலைமை நினைப்பிலே ஈர்த்தலைமாடலாயிற்று. சிறுசொல், அதைச் செருகி வைக்கும் விதத்தால், சுவையும் சோகமும், நகைப்பும் நாணமும், கோபமும் குதூகலமும், உணர்ச்சிகள் பலவும் உலவக்காணலாம். எங்கே கொஞ்சம் நீங்களே, சிந்தியுங்கள், இந்த எங்கே, என்ற பதத்தின் தன்மையைப்பற்றி! எங்கேயோ ஆரம்பித்து எங்கேயோ போகிறேன் என்று நீங்கள் எங்கே எண்ணிவிடுகிறீர்களோ, என்று எங்கேயின் அருமை பெருமைகளை இங்கேயே உரைத்திடுகிறேன், வேறுஎங்கும்சென்று நீங்கள் தேடவேண்டாம்.

"எங்கே மூக்குக்கண்ணடி, எடு இப்படி" என்று கேட்டுப்பெற்று ஏடுபிடிப்போனலும், "எங்கேயோ வைத்தேன் காணவில்லையே" என்று எட்டைத்தேடும் இளைஞனலும், "எங்கே இப்படிக் கொஞ்சம் கொடுங்கள் படித்துவிட்டுத் தருகிறேன்" என்று இரவல் கேட்கும் இலக்கியக்கொலைஞனனலும், எங்கே இருப்பவரானலும், இந்த எங்கே என்ற பதத்தை அணிகலனக்கொண்ட பல கருத்துகளை, எண்ணிப்பார்க்காமலிருக்க முடியுமா!

இதே நேரத்தில், பட்டுக்கோட்டையிலே, பாரமார்த்திகத்தை கம்பும் பக்தகோமான்கள், "எங்கே அந்த பிரம்மஸ்ரீயைக்காணேம்?" என்று பேசுவர் என்பது எனக்குத்தெரியும். யாரோ ஒரு புராணப்பிரசங்கியொராம், இராமாயண காலக்ஷேபம் செய்ய அழைக்கப்பட்டிருந்தாராம் பட்டுக்கோட்டை இராமபக்தர்களால். பிரசங்கமிருத மகா வித்வானின் பிரசாதத்தை உண்டு, பிறவி எனும் பிணிக்கு மருந்துகொண்டு, உய்யவேண்டினர் போலும், அந்த இராமதாசர்கள். அது குறித்து எனக்குக் கவலையில்லை. அருள்பெற, ஊசிமுனைமேல் நின்று தவம் செய்தவரும், நெருப்புக்குண்டத்திலே நின்றவரும், நீரில் மூழ்கியவரும், மற்றும் நினைக்கொணதன செய்தோரும், இருந்தனராமே, இவர்கள் பாபம், செவியிலே சத்தத்தை வீழச்செய்து முக்திக்குவழி கோலமுயன்றனர், போகட்டும், என்று தான்நான் இருக்க எண்ணுவேன். ஆனல் காலம் இருக்கிறது, அது இத்தகையவரின் காதைப் பிடித்திழுத்துத் தலையில் குட்டிக்கேட்கிறது, 'ஏ! மடத்தனத்திற்கு மண்டியிடும் மக்களே! உலகிலே செய்ய வேண்டிய காரியம் எவ்வளவோ இருக்க உம்மைச் சுற்றிலும் எத்தனையோ இழிவுகள்கிடக்க, அவைபற்றிக்கவலை செலுத்தாமல், முக்திதேட முயலுவதும், அதற்காக முணமுணப்பதும், முப்புரிகாலில் விழுவதுமாக இருக்கின்றீரே, இது அறிவுடைமையாகுமா"என்று. உணர்ச்சியால் உந்தப்பட்டு, கஷ்டநஷ்டத்தைப்பற்றிக் கவலையற்று, கொள்கைக்குக்கட்டுப்பட்டு, ஏழையைக் கண்டால் அனலிடுமெழுகெனஉருகும் தன்மையும், எதிர்ப்பைக் கண்டால், எஃகுபோன்ற உறுதிகொள்ளும் தன்மையும் கொண்ட மனம்உடையவராய் பணிபுரிவதில் விருப்பமும் படாடோபத்தில் வெறுப்பும் கொள்ளும் இயல்பினராய் உள்ள வீரவாலிபர்களைத் தானே, காலம்என்றதளபதி தனதுபடையிலேவைத்துள்ளான்.பட்டுக்கோட்டைப் படையினர் தட்டிக்கெடுத்தடுமாறும் போக்கினராக மக்களையாக்கிடும், புராணப் பிரசங்கங்கள் நடக்கப்போவதறிந்தனர். என்னே! இன்னமும் இந்தநிலையை வளரவிடலாகுமோ என்று யோசித்தனர், என்செய்தனர்? எந்தக் கம்பராமாயணத்தைப்பற்றிப் பாகவதர் பிரசங்கம்செய்ய இருந்தாரோ, அதே கம்ப இராமாயணத்தின், போக்கையும், ஆரியருக்கு அது விளைவிக்கும் ஆக்கத்தையும், அறிவீனத்துக்கு அது அளிக்கும் ஊக்கத்தையும் பொதுமக்களுக்கு எடுத்து விளக்கிவிட வேண்டும், அங்ஙனம் செய்துவிட்டால், பொதுமக்கள், இப்புராணப் புளுகரின் போக்கைக் கண்டிக்கப்புறப்படுவர், மக்களின் நேரமும் நினைப்பும் செல்வமும் பாழாகாது என்று எண்ணிய இளைஞர்கள், பட்டுக்கோட்டையிலே, கம்ப இராமாயணக் கண்டனக்கூட்டம் ஏற்பாடு செய்தனர். ஊர்முழுதும் இச்செய்தியை முழக்கமிட்டனர். பார்த்தார் புராணிகர்! வழக்கமாக, இதுபோலப்புராணம் படிக்கச்சென்ருல், படியை ஆழாக்காக்காய்ச் சிச் சீனியும் சேர்த்துச் சிறிதளவுகுங்குமப்பூவும் கலந்து, தங்கவளைதாண்டவமாட, வைரம் ஒளிவிட, மேனியின் அழகுபாக்குக்கூற, வெள்ளிச் செம்பிலே, காய்ச்சிய பாலை ஊற்றி எடுத்துச்செல்லும் காரிகையரும், காணிக்கைதந்து காலைத்தொட்டுக் கும்பிடும் கனதனவான்களும், அனுமாரின் வீரப்பிரதாபங்களைக்கேட்டு, அம்பியின் சேட்டைகளை அதனுடன் ஒப்பிடும் அம்மாமிகளும், பத்துத்தலை இராவணன் இராமனின் பட்டமகிஷியை, "இச்சைக்கினியவளே! பச்சைமாமயிலே! பசும்பொன்மேனியளே! பவள இதழினளே! உன்னைநான் அடைந்தே தீரவேண்டும், உன்மீது எனக்குள்ள மோகம், கைலையைவிடப் பெரியது, உன்னை எண்ணி நான் விடும் கண்ணீர் கங்கையைவிடப் பெரியது, என்பெருமூச்சோ, எரிமலைக்கும் கொடிய அக்கினியையும் சாதாரணமானதென்று எண்ணிடச்செய்யும் விதமாக இருக்கிறது. தங்கக்கட்டிலிலே, மலர்தூவிய பஞ்சணையிலே நாமிருவரும் கொஞ்சி விளையாடும் காலம் என்று வருமோ, மாதே! மாதரசி! மணியே!" என்றெல்லாம் வருணித்து, ஆசைமொழி காட்டினன் என்று, புராணிகர் படிக்கும் போது, "உண்மைதான்! பெண்ணை வசியப்படுத்த இந்த ஆண்கள் இதுபோலத்தான் பேசுவது வழக்கம்" என்று அனுபவத்தை ஆதாரமாகக்கொண்டு கூறும் ஆரணங்குகளும் உபசாரம்செய்வதைக் கண்டதுண்டு. இது கண்டறியாக் காட்சியாகவன்றே இருக்கிறது, வாலிபர்கள் கண்டிக்கக் கிளம்பிவிட்டார்களே, அவர்கள் எதிர்க்க ஆரம்பித்துவிட்டால்,அடக்க முடியாதே என்று புராணிகர் எண்ணி ஏங்காதிருக்கமுடியுமா!

ஆப்பை அசைத்துவிட்டு வாலறுபட்ட குரங்கு, வாலை இழக்குமுன்பு புத்தியை இழந்துவிட்டது, எனவேதான், ஆப்பை அசைத்தது. சில அப்படி இராது. முன்னெச்சரிக்கையோடு நடந்துகொள்ளும். மனிதரிலும் இப்படித்தான். சிலர் ஆழம் தெரியாது காலைவிட்டுவிடுவர், பிறகு "ஆற்றவாரில்லை, தேற்றுவாரில்லையே நான் என்ன செய்குவேன்" என்று அழுவர். சிலர், எண்ணித்துணிக கருமம் துணிந்தபின் எண்ணுவமென்பதிழுக்கு என்ற வேலேத்திட்ட முடையவர். பட்டுக்கோட்டையிலே புராணம் படிக்க வந்தவர், பூதத்தோடு நடந்து கொண்டார், வம்பையிலேகொடுத்து, வாங்குவானேன் என்று யோசித்தார், தன்மானத்தோழர்களிடம் சென்றுகூறினர் 'நான்புராணம் படிக்க வரவில்லை" என்று, காரில் ஏறினர், தஞ்சை சென்றர்.

குத்துவிளக்கைத் துடைத்துவை! குங்குமப்பரணியைத் தேடிப்பார்! அகல் விளக்கை அடுக்கிவை! அக்காரவடிசல்

(4ம் பக்கம் பார்க்க)

# திராவிட நாடு

காஞ்சி 19—3—44 ஞாயிறு


# அந்தக் குட்டையிலே!

—○⁂○—

“தூடிக்கக்காசு கிடைச்சுதின்னு
துடிச்சிகின்னு ஓடிபோயி,
புடிச்சிழுத்தேன் கையாலே கடவுளே!
பாசி, பிடிச்சுக்கிட்டு தோங்குதடா
கடவுளே!
பாசி, பிடிச்சுக்கிட்டு தோங்குதடா
கடவுளே!”

இந்தத் தன்னானேனன்னானேவைக் கேட்டிராத தமிழன் இருந்திருக்கமுடியாது. தூண்டிலைப் போட்டான், மீன் கிடைத்ததென்று நினைத்தான், களித்தான் காசுகிடைக்குமென்று, இழுத்தான் மீனல்ல, பாசிதொங்கிற்றும், பரிதாபத்துக்குரிய அந்தப்பாரதவ குலத் தோழனுக்கு. நகைச்சுவை மன்னன் கிருஷ்ணனும் அவருடைய தோழர்களும், நடத்திய வேடிக்கைக் காட்சியிலே ஒன்று, இந்த மீன் பிடிக்கப்போய்ப் பாசியைப்பெற்ற கதை!

குட்டைக்கு ஏற்றபடிதானே மீன் கிடைக்கும்! தூண்டில் போட்டால் நிச்சயம்மீன்கிடைக்குமென்றோ, வலைவீசினால் வரால் வருமென்றோ எண்ண முடியுமா! நமது மதிப்புக்குரிய வைசிராய் அவர்கள், பாசிபிடிச்சிக்கிட்டுத் தொங்குதடா கடவுளே! என்று பாடமாட்டாரே தவிர அவருடைய போக்கின் விளைவு இது போன்ற நிலைமைக்குத்தான் அவரைக் கொண்டுவந்துவிட்டிருக்கிறது.

சர்க்காருக்குத் தோல்விமேல்தோல்வி என்று நாள்தோறும் படிக்கிறோம். மத்தியசட்டசபையிலே, சர்க்கார்சார்பாகப் பேசுவோர் மீது சரமாரியானபாணங்கள் தொடுத்துவருகின்றனர். இதனைக் களிப்புடன் செய்கின்றனர் காங்கிரஸ் அன்பர்கள். இது, பாசி பிடிச்சிகிட்டுத் தொங்குதடா கடவுளே, என்ற பாட்டு போல் இருக்கிறது, காரணம், முதன்முறையாக வைசிராய் வாய்திறந்ததும், காங்கிரசின் கனத்தையும், அஃகட்சியின் ஒத்துழைப்பு கிடைக்கவேண்டியதன் அவசியத்தையும் விளக்கியதுடன், பூகோளத்தைப் போதித்தார்! இந்தப் பேச்சு,காங்கிரஸ்காரர்களுக்குச் சுவையூட்டும், அதன் பயனாக, ஊடல்திரும்கூடிடலாம் என்று கருதியிருப்பார், தூண்டிலை நடுத்தண்ணியிலே வீசியவன், மீன்கிடைக்குமென்று எண்ணுவதுபோல. ஆனால் கிடைத்தது, மீனல்ல! பாசிதான்! சர்க்காரின்போக்குக்குக் கண்டனம், எதிர்ப்பு இவைகளே!

இப்படித்தான் நேரிடும் என்பதை நன்கு உணர்ந்தே, லீக்தலைவர் ஜனாப் ஜின்னா, வைசிராய் அவர்களின் சொற்பொழிவினைக்குறித்துத் தமது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்போது “வைசிராய் காங்கிரஸ் குட்டையிலே மீன் பிடிக்கிறார்” என்று நகைச்சுவை ததும்பக் கூறினார். இப்போது, வைசிராய் அவர்கள், காங்கிரஸ் குட்டையிலே மீன்பிடிக்கக்கிளம்பினார் என்பது மட்டுமல்ல, அவருக்குக் கிடைத்தது, மீனல்ல, வெறும்பாசிதான், என்பதும்விளங்கிவிட்டது. என்ன செய்யப்போகிறார் வேவல்பிரபு! சனாதனச்சேறு நிறம்பியதும், வைதீகநச்சரவுகள் நெளிவதும், முதலாளித்தனமெனும் சுழிகள்நிறம்பியதும், திராவிடரை அழுத்திடும் படுகுழியாக உள்ளதுமாகிய, காங்கிரஸ் குட்டையிலே மீன்பிடிக்கலாம் என்று எண்ணிக்கொண்டிருக்கப்போகிறாரா, அல்லது, பூகோளம் ஒருபெரியபித்தலாட்டத்தை நிலைக்கச்செய்யவே பயன்படுகிறது என்பதை உணர்ந்து, இனஅரசுஅமைக்கும் இலட்சியத்தை ஆதரிக்கமுற்படப்போகிறாரா, அல்லது, இங்குநாம் இருப்பதுஆள, நாடு மீளவழிசெய்யும் பொறுப்பு நம்முடையதல்ல என்று இருந்துவிடப்போகிறாரா, என்பது இனிப்போகப்போகத்தான் தெரியவரும். ஒன்றுதெளிவாகிவிட்டது, இனி, அவர் அந்தக்குட்டையிலே மீன் கிடைக்கும்என்று நம்பமாட்டார்!!

—

# எங்கே? எங்கே!

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

செய்துவை! செம்பில் நீரைவை! சந்தனத்தை வட்டிலில்வை! கற்கண்டுகொண்டுவா! தாம்பூலமும் வரட்டும்! என்று கட்டளைகளைப் பிறப்பித்துக்கொண்டிருந்து புராண உபன்யாசத்தை ஏற்பாடுசெய்த பேர்வழிகளின் முகம், எப்படி இருந்திருக்கும், உபன்யாசகரின் ஓட்டத்தைக் கேட்டு. அதுபோதாதென்று, தன்மானத்தோழர்கள் தங்கள் கூட்டத்தையும் நடத்தினர், கம்ப இராமாயணத்தால் விளைந்த கேட்டினை ஊராருக்கு எடுத்துரைத்தனர். இவ்வளவு ஆபாசம் அதிலே இருப்பதனால்தான் போலும், ஏடுபடிக்க வந்த புராணிகர் எடுத்தார் பெருநடை! என்று மக்கள் பேசாதிருக்க முடியுமோ! இது இத்திங்கள் 15ந் தேதி நடந்ததாம் பட்டுக்கோட்டையிலே. ஆங்காங்கு கம்ப இராமாயண உபன்யாசம்செய்து வாழும் நாவாணிபர்கள்,நிலையைநன்குகவனித்து, நாட்டுக்கும் காலத்துக்கும், அறிவுக்கும். ஆண்மைக்கும் ஏற்றதானகாரியத்திலேஈடுபடவேண்டுகிறேன்.எங்கேஅவர்களாஎன் பேச்சைக்கேட்பவர்கள்! “எங்கேகாணோமே உபன்யாசகர்?” என்றுபட்டுக்கோட்டைப் பக்தர்கள் தேடிட வேண்டிய நிலைமை ஏற்பட்டதே, அதுமற்ற இடங்கட்கும், வாராமற்போகாது, நாம்கேளாமல் இருக்கப்போவதில்லை. எங்கே இருந்தாலென்ன, இது எங்கும் இனிநடைபெறக்கூடியதுதான். எத்தனைநாட்களுக்குத்தான் ஏனோதானோ என்று இருக்க முடியும், நமக்கென்ன என்று இருக்க முடியும்.

எங்கேயோ ஒருகதை படித்ததாக எனக்குக்கவனம். இவன்சொல்லி நான் கேட்பதா? என்றமனப்போக்குகொண்ட ஒரு மதியிலி, தன்நண்பன் எவ்வளவோ தடுத்தும், நீ தடுப்பதென்னநான் அதற்குக் கட்டுப்படுவதென்ன என்று சொல்லிக்கொண்டே முள்வேலியிலே பாய்ந்து உடலெங்கும் இரத்தக்களரியாகிப் பிறகு ஓலமிட்டானாம். அதுபோலச் சிலர் கம்ப இராமாயணத்தைஇவர்கள் கண்டிப்பது, இதைநாம் மதிப்பதா? என்ற பெருமதிகொண்டு, நாங்கள் பிடித்தபிடியை விடவேமாட்டோம், மாறுபாடு பேசினால் செவிதரவே மாட்டோம், என்று பாடிக்கொண்டு, அந்தஏட்டைச் சுமந்து கொண்டு இருக்கின்றனர். அவர்கள் இஷ்டம் என்றுதான் என்போன்றவர்கள் இருப்பர், இனி வாலிபர்களும் அதே போலிருப்பர்என்று என்னால் உறுதிகூற முடியுமா? இதோ சென்னையிலே, கம்பர் விழா கொண்டாடப் போகிறார்களாம், பண்டித மணி இருக்கிறாரே, கதிரேசர் அவர் தலைமையிலே! பொருள்வேண்டுமாம்! இத்தனை தடவை நடத்தியதைவிட அதிகவிமரிசையாகநடத்தப்போகிறார்களாம்! நடத்தட்டும் பாவம், இந்த நானிலத்திலே எத்தனை எத்தனையோ காரியம் நடந்தபடிதான் இருக்கிறது. இவைகளிலே பல, நாகரிகமக்களுக்குப் பிடிக்காது. என், சட்டம் ஒப்புக்கொள்ளாத காரியங்களுங்கூடத்தான் சந்தடியின்றி நடந்துவரக் காண்கிறோம். குலைக்கும்குக்கல், கூவிடும் காலி, கதறிடும் நீலி, கானத்தைப்பழிக்கும் கர்த்தபம், ஊளையிடும் ஓநாய், உளறிடும் குடியன், கூத்தாடும் பித்தன், நடுநிசியில் சுவர்துளைக்கும் கள்ளன், வேலியைத்தாண்டும் விபசாரி, வழிபறிக்காரன், வலியவம்புக்கு நிற்பவன், என்றஇன்னோரன்ன பிறநடமாடும் நானிலத்திலே, ஏதேதோ நடக்கும், எதைத்தடுப்பது எதை அடக்குவது, என்று எனக்குச் சில சமயங்களிலே சலிப்புத்தோன்றுவதுமுண்டு. கம்பர் விழாக்கொண்டாடும் கண்ணியர்கள், நாட்டுவளம், இயற்கை எழில் முதலியன பற்றிக்கசிந்து கண்ணீர் மல்கினால் எனக்குக் கோபம் வராது. புலவர் பெருமக்களைப்போற்ற வேண்டுவதும், கலையின் சுவையைப் பருகவேண்டியதும் முறைதான். ஆனால் கம்பனின் கவிதாத்திறனை இரண்டாந்தரமானதாகக் கருதிக்கொண்டு இராமநாமமேகற்கண்டு அதை அறியாதான் தலையிலே கற்குண்டு என்று பஜனை பாடிடும் “ரஜனைப்” பிரியர்கள் கிளம்புகிறார்களே, என்பதே எனக்குண்டாகும் கவலை. சென்னைக்கம்பர் விழாக்காரரின் மனப்போக்கு எனக்குத்தெரி



யாது, ஆனால் அவர்கள் அதனை நடத்திக்காட்டும் தன்மை அதனை நாட்டுக்குத் தெரியப்படுத்தும் என்று நம்புகிறேன். ஆனால். ஒன்றுமட்டும் கூறுவேன், அவர்களின் உள்ளத்துக்குப் புண் உண்டாக்க என்பதற்காக அல்ல, உலகப்போக்கை அவர்கள் உணரவேண்டும் என்ற கருத்தினால், நாடு நலிந்திருக்கிறது, இதற்கு ஆதாரம்காட்டத் தேவையில்லை. தற்குறித்தனத்தைத் துணையாகக்கொண்டு தரித்திரம் இங்கு தாண்டவமாடுகிறது. இதற்குத்தர்க்கம் தேவையில்லைஎன்று எண்ணுகிறேன். எச்சில் இலையை இழுக் கும்நாயுடன் மிச்சத்தைக் கௌவும்நாய், சண்டையிட இரண்டையும் எதிர்த்து அடித்துத் துரத்திவிட்டு, இலையை வழிக்கும் வீரனும், இந்நாட்டவர், நம் இனத்தவர், இதனைச்சித்தரிக்கத்தேவையில்லை, சித்தம் சிதையும். சேலையில் பாதியை உடலில் சுற்றிக்கொண்டு, மற்றப்பாதியைத் துவைத்து காற்றில்உலரவைக்கும் மாதர்களைக்காண்கிறோம். வறுமையின்கோரம், வகைவகையாகத் தெரிகிறது. இந்த வறுமைகோரத், தற்குறித்தனம் துணைசெய்வதைக் காண்கிறோம். தரித்திரத்தைத் துரத்தவேண்டுமானால் தற்குறித்தனத்தைத் தொலைத்தாகவேண்டும். தற்குறித்தனத்தை வளர்ப்பதுடன் தெகிடுதத்தக்காரிடம் தெளிவில்லாதாரைச் சிக்கவைக்க, இன்று புராணஅறிவு பயன்படுகிறது, பயன் படுத்தப்படுகிறது. பழமை எனும் புழுநெளியும் பழமாகஇருக்கிறது புராணங்கள். பகுத்தறிவை மக்கள்எட்டிபோலக்கருதவும், மாறுதல் என்றஉடன் மருளவும், விஞ்ஞானம்என்ற சொல்கேட்டாலே விசாரப்படவுமான நிலைமைநீடித்திருக்கக்காரணம், புராணங்கள் புகட்டும் புல்லறிவிலே, மக்கள் இன்னமும் புரண்டுகொண்டிருப்பதுதான். எனவே, எங்கே, எந்தவிழா கொண்டாடினாலும், இந்தப் புராணப்புல்லறிவைப் போக்க ஒரு சிறுபொறிகிளப்பினாலும் அவர்கள், சமுதாயத்துக்குப் பலனுள்ளசெயல் புரிந்தவரெனநான் மதித்திடுவேன். பாராட்டுவேன். மாறாக,எந்தவிழா எங்கேநடப்பினும்,அதிலே கதிரேசர்கள் தலைமைதாங்கினாலும், திகிலேசர்கள் திறந்து வைத்தாலும்,அந்த விழாமூலம், புராணப்புல்லறிவு ஆதரிக்கப்பட்டும், வளர்க்கப்பட்டும் வருமானால், அந்தவிழாக்கள்,ஏமாற்றுத்திருவிழாக்கள், ஏமாளிகளை இரக்கமின்றி வஞ்சிக்கும் எத்தர்களின் திருவிழாக்கள் என்றே கருதுவேன்.

“ஏ! அப்பா! நீ கருதுவதுபற்றி எமக்குக்கவலை என்ன! யாம்யாரென அறியாய்கொல்! சங்கத்தமிழின் சாறுபருகிய எம்மிடம் சாயாது உனதுசெயல், நில். சந்தம் இயற்றவல்லையோ சற்றுச்சொல்”—என்று கேட்பர் சிலபுலவர் பெருமக்கள் என்பது எனக்குத்தெரியும். என்கருத்து மிகப்பெரியமதிப்புடையது என்றுகூறும் அளவு நான் தெளிவற்றவனல்ல. நான் எடுத்துக்கூறுவது வாலிப உள்ளம். அதனை, அளந்திடவும் மதிப்பிடவும், அன்பர்கள் முயலவேண்டும். வாலிபஉலகம், இதுநாள் வரை, இந்த வீணுரைகளைக் கேட்டது போதும், படமுடியாதினித் துயரம் பட்டதெல்லாம்போதும், என்று கூறுகிறது. அதைத்தான் நான் கூறுகிறேன் புராணப்பிரியர்களுக்கு. பொய்யுரைகளைக் கேட்டுக்கேட்டுச் சலித்தோம், அறிவீனமான செயல்களை அருள் நடத்தை என்று மூலாமிட்டுத் தந்தீர்கள், கண்டுகளைப்படைந்தோம், இனி இத்தகைய ஆபாச, அறிவற்ற, பொய்யுரைகளை ஆரியத்துக்கு ஆதரவுதரும் கருத்துரைகளை நாங்கள் நாட்டிலே பரப்பவிடமாட்டோம், உறுதி, உறுதி என்று வாலிப உலகம்முழக்கமிடுகிறது. அதனைப்புராணிகரின் உலகுக்கு நான் உரைக்கிறேன், உலகறிந்து ஒழுகும்பண்பு ஓரளவாவது அவர்களிடம், இருக்கும்என்ற நம்பிக்கையால். எங்கே, இந்தபுராணிகர் இந்த என் நம்பிக்கையையும் தங்கள் நடவடிக்கையினால் பொய்யாக்கி விடுகின்றனரோஎன்ற ஐயமும் உண்டு. ஆயினுமென், அறிந்திடுவர் என்று சொல்கிறேன், அவர், அறியாதார் என்பதைக்காட்டிக் கொள்வதிலே ஆர்வமுள்ளவராக இருப்பின், இதுகளிடம் நமக்கென்னவேலை, என்று கூறிவிட்டுச் செல்கிறேன், உலகம் பெரிது! புராணங்களின் மூலம்புல்லறிவே பரவுகிறது என்று நான் கூறியது, காரணத்தோடு, கோபத்தோடு அல்ல. மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத எவ்விஷயத்துக்கும், அறிவுப்பொருத்தத்தை அறவே அகற்றிய அனியாயமே, புராணங்களால் புகட்டப்படுகின்றன. கடவுளைப் பற்றிய கதைகள் உளவே, காதுக்கு நாராசம், கருத்துக்குக் கடுவிஷமாகப் புராணங்களிலே அமைந்துள்ளன. ஒரு கடவுளேனும், காமாந்தக்கார மகற்றியதாகவோ, பிறன்மனை நுழையும் பாதகமில்லாதாராகவோ சிருஷ்டிக்கப்படவில்லை, புராணம்எழுதினவர்களால். ஆண்டவனுக்கே இந்தக்கதி என்றால், அடியார்களைப்பற்றி அதிகம் கூறுவானேன், இன்று நமது புலவர்கள், எவ்வளவு பாடுபடுகின்றனர், அந்த அடியார்களின் செயல்களைப்பற்றி அறிவுலகம் ஆராய்ச்சியின் பயனாகக்கேள்விகள் கேட்கும்போது. கள்ளக்கையொப்பமிட்டவனுக்கு வழக்கு நடாத்த இசைந்த வக்கீல், இரவு தூங்காது, பகலில் படுக்காது பசிஇழந்து, நண்பர் கூட்டம் துறந்து, பொய்யை மெய்யாக்க, அநீதியை நீதியாக்கப், பலஏடு புரட்டிப், பதத்தைஉருட்டி, மாற்றானின் மனதை மருட்டி, எப்பாடுபட்டேனும், வழக்கை வென்று தீரவேண்டும் என்றுதுடிப்பதுபோலல்லவாநமதுபுராணப்புலவர்கள் பழய ஏடுகளுக்குப் புதுப்பொருள் உரைத்தும், மறைபொருள் உண்டு அந்தை உணர்மதிவேண்டும், அருள்நிதிவேண்டும், என்று புகன்றும், அறிவேபோதுமென்றிராதே உணர்வுஎன்று ஒன்று உண்டு, அதை விண்டிடவோமுடியாது, விட்டிடவோகூடாது என்றுபேசியும், அடியார் காதைகளுக்கும் ஆண்டவனின் செயல்களுக்கும், பகுத்தறிவுப் பாசறைபூட்டும் பாணம் தைக்காதிருக்கத்தமது புலமை எனும் போர்வை பயன்படுமாஎன்று பார்க்கின்றனர். எங்கேஇருக்கும் புலவரானாலும் எந்தப் புராணத்தையேனும் எடுத்துஅலசி, அவரிடம் கேட்டுப்பாருங்கள், இப்படி இதிலேஎழுதிஇருக்கின்றதே, இது அறிவாகுமா அருளாகுமா, புத்திஏற்குமா, அறிவுலகம் ஆதரிக்குமா, நாகரிகமா நல்லோர்செயலா, என்று கேளுங்கள், பிறகு பாருங்கள், அவர்களின் அகம்படும்பாடு முகத்திலேதெரிவதும், ஆதாரம் இல்லாததால் அகங்காரம் பிறப்பதும், வாதம்புரிய வழிஇல்லாததால் வசைமொழிவதும், வேடிக்கையாக இருக்கும், பார்க்க. சிலர் பகுத்தறிவாளர்களின் கேள்விகளுக்குப் பதில்கூறும் முறை, பட்டுக்கோட்டையிலே கட்டிவிட்டேன் கடையை என்றுகூறினாராமே ஒருமுப்புரி, அதுபோன்றமுறையிலேஇருக்கும். சிலருடையமுறைபண்டிதமணிபேசினாராமேதாத்துக்குடியிலே, அதுபோலக் கடவுளே! இதுகளுக்குக்கூலிகொடுஎன்று சாபமிடுவதுபோன்றதாக இருக்கும். வேறுசிலர் கண்டபோது குழைவர் காணாப்போது பொழிவர். மற்றும்சிலர், மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் என்ற பாசுரம்போல, இதற்கெல்லாம் நீண்டநேரம்வேண்டும் நிம்மதியும்வேண்டும், இப்போதோ அவசரமாய் நான் போகவேண்டும், என்றுகூறுவர். திரு.வி. கலியாணசுந்தரனார் போன்றார்களோ, பூண்பனவும் புனைவனவும், பூசுவனவும் பிறவும்எடுத்துப் பிணத்துக்குச் சூட்டியும் கட்டியும் பூசியும், பக்கநின்று பரிமளம் வீசிடும் என்பார்த்திபனே! என்று புலம்பும் இழவுஇல்லத்தார்போல, இன்றைய அறிவெனும் பேழையைத்திறந்து, நல்லன பலஎடுத்து, நாறும்பழமைக்கு இட்டுக்காட்டி, நல்லகுரலிலே, செல்லத்தமிழிலே செப்புவர் பழமையின் பெருமை பற்றி. ஒவ்வொன்றும் ஒவ்வொருதுறை எனினும், இவர்யாவருக்கும் ஒருகுறை பொதுவாக அமைந்திருக்கிறது, நாப்பறைக்கு வேலைஇலாதுபோகுமே இந்த நாலெட்டுப்புராணங்கள் ஒழிந்து போனால், என்றபயம் இருக்கிறதே, அது தான் இவர்கள் அனைவருக்கும் பொதுவாகஉள்ளகுறை.

தெளிவாகவேகூறுகிறேன், புலவர்கள் பொன்வீடுகட்டி வாழட்டும், போகப்புனலில் நீந்திவிளையாடட்டும், புவியரசர் சிவிகைதாங்கும் நிலைபெற்றக்கவி அரசர்களெனத்திகழட்டும், மகிழ்வேன், மனத்தாங்கல்கொள்ளேன். ஆனால் மக்களின் மதியைமாய்த்து, இவர்களின் புலமை துலங்கவேண்டுமானால், நான் சகியேன், நாடுசகியாது, காலம்இனி இதற்கு இடங்கொடாது. புலமை பொலிவுறவிளங்கட்டும், அது பூசுரருக்குவீசும் சாமரமாகாதிருக்கட்டும் என்றநிபந்தனையை, விழிப்

(6-பக்கம் பார்க்க.)

## எங்கே எங்கே.

5ம் பக்கத் தொடர்ச்சி.

புற்ற இனம் விதித்தேதீரும். அதனைமீறு வது தடுக்குத்தனம் என்றுநான் கூற நினைக்கவில்லை, பேதைமை என்றுகூறு வேன், சிலசமயம் தடுக்குத்தனத்தை விடப் பேதைமையால் இழிவு அதிகமாக விளையும். எச்தப்புலவரைவேண்டுமானு லும் எவ்வளவு வேண்டுமானுலும் புகழட் டும் விழாக்களிலே, ஆனல், மக்களின் மானத்தைமங்கச்செய்யும் மதியற்ற கதை களேயும் கருத்துக்களேயும் மண்மூடச் செய்யவேண்டும். கல்லுங்கரையும் மண் ணும் உருகும் இவர் கவிதையால், என்று எவரைவேண்டுமாயினும் புகழ்ந்துபேசட் டும், அங்ஙனம்பேசுவதால் இவர்களின் சத்தமாட்டிலே, கேட்கட்டும்நமக்கொரு நஷ்டமில்லை, ஆனல், அவர்களின் கற் பனைகளே, கடவுட்கொள்கையாக்கவும், மதக்கட்டளையாக்கவும், ஒழுக்கவழியாகக் காட்டவும்கூடாது, அதுசெயல் அடாது, அடாது செய்தோருக்குக், காலம் தக்க தண்டனை தருமாம்!

"தாதைந்து நாழிகையில், ஆறு
நாழிகைதனிற்
சொற்சந்தமாலே சொல்லத்துகளிலா
அந்தாதி ஏழுநாழிகைதனிற்
பரணியொருநாள் முழுதுமே
பாரகாவியமெலாம்
ஓரிருதினத்திலே பகரக்கொடி"

கட்டிடும் காளமேகங்களாகக் கொலு வீற்றிருக்கட்டும், ஆனல், ஆரியக்குற்றே வலாகி, அவர்கட்கு அடைப்பந்தாங்கும் பேர்வழிகளாகமட்டும், இருக்ககூடாது. அங்கிலே அடைந்தோரை, தமிழகத்தின் களைஎன்றே வாலிபர் கருதுகின்றனர்.

எங்கேயோ, ஏதோநடக்கிறது நமக் கென்ன என்றிருக்கும், நாடிமுறுக் கற்ற "நல்லவர்கள்" சிலருண்டு, ஆடவரி லும் பெண்களிலும். பரத்தையைநாடிச் சென்ற பதியைப்பற்றிப் பத்தினி ஒரு வள் பாடினளாம்,

"எங்கேயிருந்தாலும்,
என் துரை, சாமிக்கென்
மீதினில் பட்சம்
இருக்குமடி அன்னமே!"

என்று, அதுபோல, நமது இனத்தவர் தானே, அவர்கள் எங்கே இருந்தா லென்ன, எதுஉரைத்தாலென்ன, என்று என்றும் எங்கும் எவரும் கருதுவரென்று கூற முடியாது. ஒருகாலம்வருகிறது,விரை வாக! எங்கே! எங்கே! ஆரியஅடிவருடி கள் எங்கே? பாசுரம்பாடி அவர்பாதத் தைநாடிய தடைநடுங்கிகள் எங்கே? பனத்தைப் பாழாக்கிப் பார்ப்பனியத் தைப் பராமரித்தசீமான்கள் எங்கே? இசையால் அவரைஇன்புறுவித்து, பிறந்த இனத்தின் இழிவுக்குக் காரணமாக இருந்த கைத்தாளமிட்டுக் கனராகம் பாடியகானமணிகள் எங்கே? பித்தர் போல்பேசவும் ஆடவும்மகளிரைக், காட்சி யாலமயக்கிய கூத்தர்கள்எங்கே? பொய்யைப் புகழ்ந்துரைத்து, மெய்யை மறைத்து, புலமையிலேமட்டுமே நாட் டம்கொண்டு மக்கள் நிலைமைபற்றிய நினைப்பைமறந்து ஆரியரிடம் தஞ்சம் புகுந்து, கொஞ்சுமொழியை அவர் களுக்கு மஞ்சமாக்கிய பஞ்சைகள் எங்கே? என்று கோபத்துடன்கேட்கும், வீரர்கள் உலவக்காணத்தான்போகி ரேம். அந்த எங்கே! எங்கே!! எனும், பேச்சு எழுமுன்னம், பக்குவமாக நடக் கும் மனப்பான்மையையாகிலும், பாவா ணர் எனும் பட்டம் பெற் றுள்ளோம் என்றுகருதிப் பூரிக்கும் நாவாணிபர்கள் பெறவேண்டும். பட்டுக் கோட்டையில் நடந்தாமே ஒருசம்ப வம், இவைபோன்றவைகளாவது, பாடம் தருமாக!

## திருவண்ணாமலையில் தமிழ்த் திருமணம்.

திருவண்ணாமலை தென் இந்திய நலவுரி மைச் சங்கத்தின் காரியதரிசியும் நமது இயக்கப்பத்திரிகைகளின் ஏஜண்டுமான தோழர் ஆர். எஸ். நடேச முதலியார் அவர்களின் மகள் திருவளர் செல்வி. பச்சையம்மாளுக்கும் பெங்களூர் சிடி திரு. வி. டி. எதிராஜ முதலியார் மகன் திருவளர் வி. இ. செல்வராஜனுக்கும் திரு வண்ணாமலை நாட்டுக்கோட்டை நகரத் தார் விடுதியில் தமிழர் முறைப்படி திரும ணம் நடைபெற்றது. திருமணத்தைபெரி யார் வரமுடியாமையால் கேப்டன் டாக் டர் காந்திமதி நாதன் அவர்கள் (எல் & எஸ். சிவில் அஸிஸ்டெண்டு சர்ஜன் கெவர்ன்மெண்டு ஆஸ்பத்திரி அருணை) நடத்திவைத்தார். உள்ளூர், வெளியூர், வெளிஜில்லாக்களிலிருந்து உத்யோகஸ் தர்கள் உத்தியோகப்பற்றற்ற கனவான் கள் உள்பட சுமார் 1500 பேர்வந்திருந் தனர். எந்தவிதமூடச்சடங்குகளும் கிடை யாது. வாழ்த்துச்செய்திகளில் முக்கிய மானவைகள் பெரியார் ஈ. வெ. ரா. ஜில்லா ஆர்கனைசர் ஜனப். கமாலுதீன் தென்னுற்காடு விரிவுரையாளர், செய் யாறு டிப்டிகலெக்டர், தாசில் தார்கள் ஆகியோர் அனுப்பினர். தெ. இ. ந. உ. சங்கத்தின் சார்பாகத் தலைவர் திரு. எம். பி. ரங்கசாமி ரெட்டியார் அவர்களும் பெரியார் வாலிபசங்கத்தின் சார்பாக திரு. பொன்னுசாமி ஆசிரியர் கள் வாலிபசங்கங்களின் சார்பாக 5வர வேற்பு வாழ்த்துப்பாக்கள்வாசித்து மண மக்களுக்கு அளிக்கப்பட்டது. பிறகு திரு மணம் என்பதுபற்றி தோழர்கள் எம். பி. ரங்கசாமிரெட்டியார், ஏ. நாராயணசாமி முதலியார் (ஜில்லா விரிவுரையாளர்)எஸ். சி. சுப்ரமணியம் (செங்கம்) முதலானவர் கள் சொற்பொழி வாற்றினர்கள். திரும ணம்இனிது முடிந்தபின் பகல் 1 மணிக்கு விருந்து (சமபந்தி) அளிக்கப்பட்டது. இதுதான் இவ்வூரில் முதன் முதலாக நடைபெற்ற தமிழ்த்திருமணம்.

## மறைவு.

பம்பாய் தாராவியில் 40 வருட பிரபல ஜவுளி அரிசி வியாபாரியும், ஏ. எஸ். சுப்பு பிரதர்ஸ் பங்காளியும் தெ. இ. ஆயில்கம்பெனி பங்குதாரும், "திரா விடன்" "விடுதலை" "குடி அரசு" "உதய சூரியன்" "திராவிட நாடு" முதலியபத்தி ரிகை நியூஸ்ஏஜண்டும், பெரியார், ஈ. ரா. வரவேற்புக்கமிட்டி பொருளாளரும் தீவிர சமூக சீர்திருத்த வாதியுமான அரியகும திரு. ஏ. எஸ். சண்முகம் 29—2—44ல் தனது 67 வது வயதில், மனைவி மக்கள் குடும்பத்தாரையும் பரிதபிக்கவிட்டு இயற் கை யெய்தினர். அன்னரின் பிரேத ஊர் வலம் சுமார் 2500 மக்களுக்கதிகமாக பின்தொடர மிக்கமரியாதையுடன் அன்று இரவு நல்லடக்கம் செய்யப்பட்டது.

## சேலத்தில்

அரிசிப்பாளையம் பகுத்தறிவுப் படிப் பக நிதிக்காக சிறந்த தமிழ்ப் பாடகரால் இன்னிசைக் கச்சேரி விரைவில் நடை பெறும்.

## சர். A. R. முதலியார்.

சர். A. இராமசாமி முதலியார் அவர் களின் உத்யோககாலம் மேலும் 5 வரு ஷங்களுக்கு நீடிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## இளங்கோவடிகள் தமிழ்க் கழகம்.

இக்கழகத்தின் ஆறுவது ஆண்டின் நிறைவுவிழா (11—3—44) பிற்பகல் 4½ மணிக்குக் கரந்தைப் புலவர் கல்லூரித் தலைவர், திருவாளர், நாவலர், பண்டித, ந. மு. வெங்கடசாமி நாட்டார் அவர்கள் தலைமையில் நிகழ்வுற்றது. திருவையாற்று அரசர் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர், வித்துவான், சி. இலக்குவனர் அவர்கள் B.O.L. "தமிழிலக்கியச்சுவை," என் னும் பொருள் பற்றியும், தஞ்சை, தூய பேதுரு உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர்வித்துவான், V. சண்முகஞ் செட்டியார் அவர்கள், "புறநானூறு" என்னும் பொருள்பற்றியும் சிறந்தசொற் பொழி வாற்றினர்கள். "கார்நைக்கவி யரசு" R. வெங்கடாசலம் பிள்ளையவர் கள் நன்றிகூறுதலுடன் விழா இனிது நிறை வுற்றது.



தலைவர்களே! பெரியோர்களே, மாணவத்தோழர்களே!! இன்று இப் பெரும் மாணவமாநாட்டில் என்னைப் பங்கெடுக்கச்செய்த தோழர்களுக்கு என் மனமார்ந்த வணக்கத்தையும் நன்றியை யும் முதற்கண் கூறவிரும்புகிறேன்.

தோழர்களே, இனஎழுச்சியால் உந் தப்பட்டு உணர்ச்சியால் வீறுகொண்டு விளங்கும் உங்களனைவரையும் வெற்றி யில் விளையாட அழைக்கிறேன். வெற் றியைமது குறிக்கோள். எவைகளில் வெற்றியடையவேண்டும்? நமது இனம், கலை, நாகரிகம், சமுதாயஇயல், பொரு ளாதாரம், முதலியபல்வேறு துறைகளில் வெற்றிகண்டால்தான் இன்று எழும்பி யுள்ள இனஎழுச்சி ஓர் முடிபடைந்த தாகும். "எதிர்காலம் மதத்தின்முன் மண்டியிடாது, விஞ்ஞானத்திற்கேவாழ்க் கைப்படும்; என்று உலகஅறிஞர் கால் வேர்டன் கூறியுள்ளார். நான் கூறுகி றேன், மனிதரிலும் பகுத்தறிவுகொண்ட வர்களுக்கே எதிர்காலம் இணங்கும்; அதிலும் இளைஞருக்குத்தான் முழுதும் வயப்படுமென்று. திராவிடநாடு ஆசிரியர் அண்ணாதுரை நேற்றுஇங்கு தீப் பொறிபறக்கப்பேசிய சில சொற்கள் இன்னும் என்காதுகளில் முழக்கஞ் செய்தவண்ணமிருக்கின்றன. அவர்குறிப் பிட்டார், "திராவிட இனக்கழகங்கள் திறவப்பட்டு, திராவிடநாட்டைத் திரா விடர்கள் அடையப்போரிடும்போது மாணவர்கள்தான்முன்னணிப்படை. அந் தப்போர் ஆரம்பித்துவிட்டது," என்று. இளைஞர்கள்தாம் முன்னணிப்படை என்று கூறியதுகண்டு இறும்பூதெய்தி யானும் ஓர் இளைஞன் என்று இறுமாப் புடன்கூறி என்போன்ற உங்களைஉயர்ந்த நிலையடைய ஒடிவாருங்கள் என்று அழைக் கிறேன். நமக்குத் தளபதிகளில்லையா? தனியரசமைத்துத் தாரணியில் பரணிபாட முடியாதா? வீரர்கள் நம்கோட்டங்களில் உலவவில்லையா? வீராங்கனைகள் வெளிக் கிளம்பவில்லையா? வெற்றி விலைகூறிக் கொண்டிருக்குமா? வெற்றியினைப்பெற் றியக்கப் பாவாணர்கள் பைந்தமிழகத் தில் இல்லாமலாபோய்விட்டார்கள்? மன் றங்களில் மார்தட்டிப்பேச மாணிக்கங் கள் இல்லையா? இவ்வளவு இருக்கும் போது வாகைசூடவரவேண்டுவது வாலி பர் கடனல்லவா? ஆனல், வாழ்க்கை வயணமான பஞ்சு மெத்தையல்ல; காடு முரடான கற்கள்நிறைந்தது. முன்னிருந் தம் ரோசாமலரைப்பறியாதவன் முட்டாளன்றோ? சந்திரனும் களங்கத் துடன்தான் காட்சியளிக்கிருன். ஆகவே, வாழ்க்கையைப்பற்றியே வாடிவிடாமல், நாட்டுப்பற்றிலும் கொஞ்சம் நாட்டங் கொள்ளவேண்டும் நண்பர்களே, என் அன்பர்களே!

அந்நியர்கடலில் அடியெடுத்துவைக்க அஞ்சியஅன்று நீலக்கடலிலே, நெடுந் திரைபிளந்து, நாவாயோட்டி முத்தும் பவளமும், அகிலும்தேக்கும், சண்பகமும்

# வாகை சூடிட —வாரீர்!—

வாகை சூடிட வாரீர்! என்று அழைக்கிருர் அன்பர் மதியழகன். ஊர் உடுமலை, பயிலுமிடம்அண்ணு மலைப் பல்கலைக்கழகம், அன்பழைப்பு விடுத்தது, குடந்தையில் கூடிய திராவிட மாணவர் மாநாட்டிலே.

மாணவ உலகு இன்று எவ் வளவு இனப்பற்று கொண்டிருக்கி றது என்பதும், உணர்ச்சியைஎடுத் துக்கூறும்போது, செந்தமிழ் எவ்வ ளவுஇன்பமாக,அவர்களிடம்சிரித்து விளையாடுகிறது என்பதும் தோழர் மதியழகனின் சொற்பொழிவிலே விளங்கக் காண்பீர்கள். திராவிடம் விழித்துக்கொண்டது என்று கூறிக் களிப்பீர்கள். இனிப் படியுங்கள், மாணவத்தோழரின் வீர உரையை.

சந்தனமும், உரோமாபுரியிலிருந்து சாவ கம்வரைவாணிபம்செய்து வளம் பல பெற்று ஞாலத்தில் நாட்டினிலக்கணத் திற்கே நாயகமாய்மிளிர்ந்த நீரத்தில் திளைந்த திராவிடநாடல்லவா நமதுநாடு. ஆனல், இன்று நாடு காடாகி மேடாகும் நிலையிலுள்ளது. செந்தமிழ்ச் செம்மல் களே, உங்களைத்தான் அழைக்கிறேன். வீழ்ச்சியுறு திராவிடத்திற்கு எழுச்சி வேண்டாமா? விசையொடிந்த தேகத் திற்கு வன்மைவேண்டாமா? வீறுகொண் டெழுங்கள்! மாற்றுனிடம் மண்டியிடும் மடமையைப்போக்கவேண்டாமா? விழித்தெழுங்கள்! நமது முன்னேற்ற வழிகளெல்லாம் மூலைகளில் முடங்கிக் கிடக்கின்றனவே. "களிநெறிந்து பெயர் தல் காளைக்குக்கடனன்றே" என்றியம்பு வது கதையா? "தமிழ்த்தொண்டு செய் யாத தமிழ்ப்பணிசெய்யாத தமிழன், பிணத்துக்குநேர்" என்று புரட்சிக்கவி புத்துலகச்சிற்பி பாரதிதாசன் சும்மாவா கூறியுள்ளார்?

ஆயிரம்யானைகளிடையில்புகுந்து அவை களைச் சின்னபின்னப்படுத்திச்சிதைக்கச் செய்யும்சியமென, நம்மறவேந்தன்சோன் செங்குட்டுவன் சீறியெழுந்து எதிர்த்து வந்த ஆரியஅரசரை அலறச்செய்து அடி பணியவைத்து விற்பனர்களாம் மற் போர்சூரர் கனகவிசயர் தலைகளில் கண் ணகிக்குக்கல்கொண்டு, விற்கொடியை விருதுக்கொடியாக்கி வடநாட்டிலிருந்து திரும்பிவந்த காட்சியை வரலாறு எடுகன் வகையாக உரைக்காவிட்டாலும் சிலம்

புச்செல்வம் நம்மைவிட்டு இன்று எங் கும் சென்றுவிடவில்லை, செய்தியைச்சித் தரித்துத்தான் வருகிறது. அன்னையவீர மெங்கே திராவிட அடலவேலாடவரே? எங்கே நம்மாண்பு? மறைந்தனவா? மாய்ந்தொழிந்தனவா? ஐயகோ! கூட்ட மாகப் பகைவர் குமுறிவந்தாலும், கூடி யெதிர்க்கும் ஆற்றலைப் பெற்றிருந்தநாம் அவ்வாற்றலைப் பண்டைப் பழங்கதை யாக்கிவிட்டிருக்கிறோமே, இஃது என்ன பேதமை! அந்தக்காலத்தில் எதிரித்திரா விடத்தைத் திரும்பிப்பார்த்தானில்லை வீரர் வாழ்பதியென்ற காரணத்தால். ஆனல், அந்நியநாட்டிலிருந்து, ஆமைமாடு ஓட்டிக்கொண்டுபஞ்சாங்கத்தைத்தஞ்ச மெனக்கொண்டு, தர்ப்பைப்புல்லை வீர வாட்களாகவிளம்பி, தத்துவார்த்த மெனும் தெகிடுதத்தத்தை மனதில் மறைத்து, ஒண்டவந்த ஆரியம், திராவிட நாட்டை அரிக்கத்தொடங்கி கொடுமை யும் மடமையும் குழம்பியசேறுகிய மதத் தில் அழுத்தி, கலையென்ற வலைவீசி நாட் டின்நிலையுணர்ந்தோரின் எஃகு உள்ளத் தினைக்கலையவைத்து நமதுநாடாம் திரா விடநாட்டை அடிமைநாடாக ஆக்கி வைத்துள்ளது. அடிமை அரசியலில் மட்டு மல்ல, சமுதாயத்திலுந்தான். அந்தக் கொடுஞ்சொல், அடிமையென்ற அற்பச் சொல், நமதுநாளிலன்றோ உலவுகின் றது.

நாட்டை எதிரிதாக்க எண்ணுவானு ஞல், அவன்பாடு அதோகதிதான் அந் தக்காலத்தில். அன்று தோன்கள்தின வெடுக்குமாம். கைகள் ஊறலெடுக்கு மாம். ஏனெனில், போரில்லையென்று. எதிரிஎக்காளமிட்டால், அவனைவாட்டி திராவிடர்தம் திறன்காட்டி, வந்தவழியே அப்புன்செய்வீரனை ஓட்டிவிடுவார். அந் தக் குருதிவழிவந்தவரல்லவா நாம்? அட்டைபோல்ஒட்டி நம்மை உறிஞ்சும் ஆரியத்தை அழித்து ஒழித்து ஆழக்குழி வெட்டி அதில்புதைக்க உங்கள்தோள்கள் துடிப்பதையானறிவேன்.

இயற்கை எழில்களைக் கற்பனையில் கனியவைத்துக் காவியங்கள்செய்த புல வர்களை நாம் போற்றத்தவறினேமில்லை. இனத்தையே இழித்துரைத்து, மாற் றான்முன் மண்டியிட மடமையைப் பெருக்கி, சமுதாயத்தைக் காட்டிக் கொடுத்த ஐந்தாம்படைக்கு அதிகாரி யாகஇருந்த எந்தப்புலவனுனாலும்—அவன் கம்பனுனாலும் சரி, அவன் அண்ணன் வம்பனுனாலும் சரி—அவனைக்காக்குந அவனைக்காப்பாற்றக் கேடயமேந்தி கையில் கட்கமேந்தி களம்புகும் கபோதி கள் யாரானாலும் அவரை எள்ளிநகை யாடி சமுதாயத்துறையிலும் நாம்வாகை சூடியாகவேண்டும்விரைவினில்வாருங்கள் தோழர்களே! பூந்தோட்டத்தில் காளான் பூத்தமாதிரி காணுவதைப்பற் றிக் கதைஉரைத்துப், பெண்டாட்டியைக்

(8ம் பக்கம் பார்க்க)

## வாகை சூடிட வாரீர்.

7ம் பக்கத் தொடர்ச்சி.

கேட்பவன் பின் அனுப்புவது பக்தி, பிள்ளைக்கறிசமைப்பது சங்கமத்தொழில், மனைவி, மைந்தர்களைப் பயித்தியமுதிர்ச்சியால் கொலைசெய்வதுதான் மோட்சத்திற்கு முன்பணம்கொடுப்பது என்பன போன்ற முட்டாள்தனத்திற்கு முதல் தாம்பூலம்வாங்கும் கதைகளைக்கலைகளெனக்கூறி மூடத்தனத்தில் மூழ்குவித்தபுலவன் ஆண்டவன் அடியெடுத்துக்கொடுத்துப் பாடின பாவாணனனாலும் சரி, சைவந்தழைக்கவந்த சேக்கிழானனாலும் சரி, அவனைப்பற்றிப் பார்ப்பவர், கேட்பவர்நகைக்கும்வண்ணம் நானிலத்தில் நவிலவேண்டும் நண்பர்களே. ஆகவே, அறிவுத்துறையிலும் எமது நாட்டினராம் எந்திராவிடச்சீயங்களே, வாகைசூடவருவீரெனக்கூறித்திராவிடம்மலர்க, மலர்க, மலர்கவென்றுகூறி என்சிற்றுரையை முடிக்கிறேன்,

## திண்டுக்கல்லில் தமிழிசைக் கழகம்.

திண்டுக்கல்லில் ஜெய விலாஸ் நாடகக் கொட்டகையில் தமிழிசைக் கழகம் மதுரை ஜில்லாபோர்டு தலைவர் தோழர் டபிள்யு. பி. ஏ. சௌந்தரபாண்டியன் அவர்கள் தலைமையில் 20—2—44ந் தேதி துவக்கப்பட்டது. சர். பி. டி. ராஜன் விழாவைத் திறந்துவைத்தார்.

தோழர் நடராஜன், சினிமாநடிகை தோழர் பி. எஸ். சிவபாக்கியம் ஆகியவர்கள் தமிழிசைக் கீதங்கள் பாடினர்.

திருமதி ராஜம்அருள், தோழர் வி. ஆர். மீனாட்சிசுந்தரம், மணிமாறன் என்ற தோழர் சுந்தரபாண்டியன், ஜனாப் வீர் முகம்மது பாவலர் முதலியவர்கள் பேசினர்.

தலைவர் தோழர் ஊ. பு. அ. சௌந்திரபாண்டியன் அவர்கள் எல்லோரும் ஜாதிமத வித்தியாசமின்றித் தமிழ் இசை இயக்கத்தைப் பலப்படுத்தவேண்டு மென்று கேட்டுக்கொண்டார்.

மாலையில் இசைவாணர் தோழர் எம். கே. தியாகராஜ பாகவதரின் கச்சேரி நடந்தது.

சர். பி. டி. ராஜன் அவர்களுக்கும் சௌந்தரபாண்டியன் அவர்களுக்கும் இவ்வூர் நகரசபையின் சார்பாக சேர்மன் ராவ்சாகிப் எம். எஸ். பி. சோலைநாடார் வரவேற்பு உபசாரப்பத்திரங்கள் வாசித்தளித்தார்.

## இந்திய வியாபாரச்சங்கம்.

புது டில்லியில் 4—3—44ந் தேதி நடை பெற்ற இந்திய வியாபாரச்சங்க சம்மே ளன 17-வது வருடாந்தரக் கூட்டத்திற் குத் தலைமை வகித்து செட்டி நாட்டு குமார ராஜா சர் எம். ஏ. முத்தையா செட்டியார் அவர்கள் சர்க்காரின் போக் கைக் கண்டித்துப் பேசினர்.



Edited Printed and Published by C. N. Annadurai M. A., at "Dravida Nadu" Press, 51-Chairman, Sambasiva Chettiar Street, L. Conjeeveram.

